# சரஸ்வதி அந்தாதி


.0.

*ஆசிரியர்*

**கம்பர்**



*உரைவிளக்கம்*

குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்
வித்துவான், **க. கதிரேசன்.** எம்.ஏ; பி;எட்
பூவாளூர். 621 712
அலைபேசி .98651 93754

# சரஸ்வதி அந்தாதி

******************************************

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்அம்மை - தூய
உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள்இங்கு வாரா(து) இடர்.
( ஏய= பொருத்தமாக )

படிக நிறமும் பவளசெவ் வாயும்
கடிகமழ்பூந் தாமரைபோல் கையும் - துடிஇடையும்
அல்லும் பகலும் அனவரத மும்துதித்தால்
கல்லும்சொல் லாதோ கவி.

(கடிகமழ் பூந்தாமரை= நறுமணம்கமழும் மென்மையான தாமரைமலர். அனவரதம்=எப்போதும்).

## நூல்

1. சீர்தந்த வெள்ளிதழ்ப் பூங்கம லாசனத் தேவிசெஞ்சொல்
தார்தந்த என்மனத் தாமரை யாட்டி சரோருகமேல்
பார்தந்த நாதன் இசைதந்த ஆரணப் பங்கயத்தாள்
வார்தந்த சோதிஅம் போருகத் தாளை வணங்குதுமே.

**குறிப்புரை** : பூங்கமலாசனம்= மென்மையான தாமரைமலராகிய இருக்கை. தேவி= அருள்தரு கலைமகள். செஞ்சொல் தார்=சிறந்தசொல்மாலை. என்மனத்தாமரையாட்டி= என் உள்ளமாகிய தாமரையில் இருந்துகொண்டு என்னை ஆள்கிறவள். சரோருகம்= தாமரைமலர். பார்தந்த= உலகைப்படைத்த.. இசைதந்த= புகழ்தந்த. ஆரணம்= வேதம். பங்கயத்தாள்= தாமரையில் இருப்பவள். வார் தந்த= உயர்வை அருளிய. சோதி= ஒளி. அம்போருகத்தாளை= தாமரைத் திருவடிகளை.

**பொழிப்புரை** : சிறப்புப்பொருந்திய வெண்மையான இதழ்களுடையதும் மென்மையானதும் ஆகிய தாமரைமலரை இருக்கையாகக் கொண்டவளும், எனக்குச் சிறந்த சொற்களால்ஆன மாலை அருளியவளும், என்மனத்தாமரையை ஆள்கிறவளும், தாமரை மலர்மேல் இருக்கின்றவனும், உலகைப்படைத்தவனும் ஆகிய நான்முகனுக்குப் புகழ்தந்த வேதமாகிய தாமரைத் திருவடியுடையவளும், எனக்கு. உயர்வைஅருளியவளுமாகிய அருள்தரு கலைமகளின் ஒளிவடிவான தாமரைத்திருவடிகளை வணங்குவோம்

**இலக்கணக்குறிப்பு** : கமலாசனம், சொல் தார், மனத்தாமரை, ஆரணப்பங்கயம், ஆரணப் பங்கயம் அம்போருகத்தாள் - உருவகங்கள்.

2. வணங்கும் சிலைநுத லும்கழைத் தோளும் வனமுலைமேல்
சுணங்கும் புதிய நில(வு)எழு மேனியும் தோட்டுடனே
பிணங்கும் கருந்தடங் கண்களும் நோக்கிப் பிரமன்அன்பால்
உணங்கும் திருமுன்றி லாய்மறை நான்கும் உரைப்பவளே.

**குறிப்புரை** : வணங்கும்சிலை= வளைந்த வில். கழை= மூங்கில். வனம்= அழகு. புதிய நிலவு= முழுநிலவு. தோடு= காதணி. பிணங்கும்= மோதும். உணங்கும்= வாடும். முன்றில்= முன்னிடம்.

**பொழிப்புரை** : வளைந்த வில்ஒத்த நெற்றி, மூங்கில் ஒத்ததோள்கள், அழகிய முலைகள் மேல்படர்ந்த பொற்சுணங்கு, புதுவகையில் எழும்முழுநிலவுஒத்தவெண்மேனி, காதணியாகிய தோடுடன் மோதும் கரிய அகன்றகண்கள் ஆகியவற்றை எண்ணி, உன்பொருட்டு நான்முகன் வருந்திக் காத்திருக்கும் முன்றில் உடையவளே! நான்மறைகளையும் சொல்கின்றவளே!அருள்க.

**விளக்கம்** : பிரமன் நான்மறைஓதக்காரணம் அவன்நாவில் கலைமகள் இருப்பதே என்றார் தேயாத நிலவின் வெள்ளொளியே கலைமகளின்மேனிஒளி என்பதால் உவமையான தேய்தல் இல்லா நிலவுஒளி என்பதைப் "புதுநிலவு எழு மேனி" என்றார். புதுமை= தேய்தலின்மை.

**இலக்கணக்குறிப்பு:** முன்றில் - இலக்கணப்போலி. நான்கும் - உம்மை முற்றும்மை.

3, உரைப்பார் உரைக்கும் கலைகள்எல் லாம்எண்ணில் உன்னையன்றித்
தரைப்பால் ஒருவர் தரவல்ல ரோதண் தரளமுலை
வரைப்பால் அமுதுதந்(து இங்(கு)எனை வாழ்வித்த மாமயிலே
விரைப்பா சடைமலர் வெண்டா மரைப்பதி மெல்லியலே.

**குறிப்புரை** : உரைப்பார் உரைக்கும்= புகழ்வோர் புகழும். தரைப்பால்= உலகில். வரைமுலைப்பால்= மலைஒத்த முலையமுதம். பாசடை விரைமலர்= பசியஇலைகளுடன் மணக்கும் மலர். பதி= இருக்கை.

**பொழிப்புரை** : தண்ணிய முத்துமாலையணிந்த மலைஒத்த முலையமுதுதந்து என்னை வாழ்வித்த அழகிய மயிலே! பசியஇலைகளுடன் மணக்கும் தாமரைமலரை இருக்கையாகக் கொண்டமெல்லியலே! புகழ்வார் புகழும் கலைகள்பற்றி நினைத்தால் உலகில்அவற்றைத் தரவல்லவர் உன்னையன்றிப் பிறரில்லை.

**இலக்கணக்குறிப்பு** : உரைப்பார் - வினையாலணையும் பெயர்.

4. இயலா னதுகொண்டு நின்திரு நாமங்கள் ஏத்துதற்கு
முயலாமை யால்தடு மாறுகின் றேன்இந்த மூவுலகும்
செயலால் அமைத்த கலைமக ளேநின் திருவருளுக்(கு)
அயலாய்வி டாமல் அடியேனை யும்உவந்(து) ஆண்டருளே.

**குறிப்புரை** : இயலானது= இயற்றமிழாகிய பாக்கள். செயலால்= ஆசியால் - வாழ்த்தால். அயலாய்விடாமல்= புறம்பானவனாகாமல் - பெறாதவனாகாமல்.

**பொழிப்புரை** : மூன்று உலகங்களையும் உன்செயலால் உண்டாக்கி வளர்த்த கலைமகளே! இயற்றமிழாகிய பாக்களால் உனது திருப்பெயர்களைச் சொல்லிவழிபட இயலாது தடுமாறுகின்றேன், நான் உனது திருஅருளுக்குப் புறம்பாகாமல் என்னையும் உளமுவந்து ஆண்டருள்க.

**விளக்கம்** : சொல்லும்கலைகளுமே உலகைவளர்த்துள்ளன. இவற்றுக்குரியவள் கலைமகள். ஆதலின் மூவுலகும் செயலால் அமைத்தவள் அவளென்றார்.

5. அருக்கோத யத்தினும் சந்ரோத யம்ஒத்(து) அழகெறிக்கும்
திருக்கோல நாயகி செந்தமிழ்ப் பாவை திசைமுகத்தான்
இருக்(கு)ஓது நாதனும் தானும்எப் போதும் இனி(து)இருக்கும்
மருக்கோல நாண்மல ராள்என்னை ஆளும் மடமயிலே.

**குறிப்புரை** : அருக்கோதயம்= சூரியஉதயம். திருக்கோலம்= தெய்விகஅழகு. திசைமுகத்தான்= பிரமன். மரு கோல நாள்மலராள்= மணமுள்ள அழகிய புத்தம்புதுத் தாமரையில் இருப்பவள்.

**பொழிப்புரை** : சூரியன் உதித்தபோதிலும் நிலாத்தோன்றியதுபோல் அழகுடன் விளங்கும் தெய்விக அழகுத்தலைவி. செந்தமிழ்ப் பாவையாவாள். நான்முகத்துடன் இருக்குவேதம்ஒதும் பிரமனுடன் எக்காலத்தும் பிரியாதுஉடன்இனிது இருப்பவள், மணமுள்ள அழகிய புத்தம்புதுத் தாமரையில் இருப்பவள், என்னை ஆள்கிற இளைய மயில்போன்றவள் ஆவாள்

**விளக்கம்** : பிரமன் நாவிலிருப்பவள் ஆதலின் “ எப்போதும் இனிது இருக்கும் “ என்றார்

**இலக்கணக்குறிப்பு** : அருக்கோதயத்தினும் சந்ரோதம் ஒத்து - முரண்தொடை.

**6.** மயிலே மடப்பிடி யேகொடி யேஇள மான்பிணையே
குயிலே பசுங்கிளி யேஅன்ன மேமனக் கூர்இருட்(கு)ஓர்
வெயிலே நிலவுஎழு மேனிமின் னேஇனி வேறுதவம்
பயிலேன் மகிழ்ந்து பணிவேன் உனதுபொற் பாதங்களே.

**குறிப்புரை** : மடப்பிடி= இளைய பெண்யானை. மான்பிணை= பெண்மான். கூர்= மிக்க.

**பொழிப்புரை**: வெளிப்படை.

**7.** பாதாம் புயத்தில் பணிவார் தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியும் தந்தருள் பாரதி வெள்இதழ்ப்பூஞ்
சீதாம் புயத்தில் இருப்பாய் இருப்பைஎன் சிந்தையுள்ளே
ஏதாம் புவியில் பெறல்அரி(து) ஆவ(து) எனக்(கு)இனியே.

**குறிப்புரை** : பாதாம்புயம்= திருவடித்தாமரை. வேதாந்த முத்தி= இறைவனுடன் இரண்டறக்

கலக்கும் முத்தி. பாரதி= கலைமகள். சீதாம்புயம்= குளிர்ந்த தாமரை. புவியில் எனக்குப் பெறல் அரிது ஆவது ஏதாம்= இவ்வுலகில் நான்பெற இயலாதது எது - அனைத்துப் பேறும்பெறலாம்.

**பொழிப்புரை** : உன்திருவடித்தாமரையில் விழுந்து வணங்குகிறவர்க்கு, பலகலைகளையும், இறைவனுடன் இரண்டறக்கலக்கும் முத்தியும் தந்தருளும் கலைமகளே! வெண்மையான இதழ்களுடையதும், மென்மையும், குளிர்ச்சியுமுடைய தாமரையிலும் என்மனத்திலும் இருப்பவளே! உன்இருப்பால் இவ்வுலகில்நான்பெறஇயலாதது ஏதுமில்லை. நலமெலாம் பெறுவேன்.

**விளக்கம்** : “ அறிவுடையார் எல்லாம் உடையார் ” (திருக்குறள்)உடையராதலின் இவள் தந்தஅறிவால் பெறலரிய நலம் ஏதும்இல்லை என்றார்.

**8.** இனிநான் உணர்வ(து)எண் எண்கலை யாளை இலகுதொண்டைக்
கனிநாணும் செவ்விதழ் வெண்ணிறத் தாளைக் கமலஅயன்
தனிநா யகியை அகிலாண் டமும்பெற்ற தாயைமணப்
பனிநாள் மலர்உறை பூவையை ஆரணப் பாவையையே.

**குறிப்புரை** : எண்எண் கலையாள்= அறுபத்து நான்கு கலைகளுக்கும் உரியவளை. தொண்டைக்கனி= கோவைப்பழம். தனிநாயகி= ஒப்பற்ற மனைவி. மணப் பனி

நாள்மலர்= மணமும் குளிர்ச்சியும் உடைய வெண்டாமரைமலர். பூவை= கிளி. ஆரணப்பாவை= வேதத்துக்கு உரியபெண்.

**பொழிப்புரை** : இனிமேல் நான் உணர்வது; அறுபத்துநான்கு கலைகளுக்கும் உரியவளை, செந்நிறத்தால் அழகுவிளங்கும் கொவ்வைக்கனியும் வெட்கும்இதழும் வெண்ணிறமேனியும் உடையவளை, தாமரையில்உள்ள பிரமனது ஒப்பற்றமனைவியை, அண்டங்களை ஈன்றதாயை,

மணமும் குளிர்ச்சியுமுடைய புத்தம்புதுத் தாமரைமலரில் வீற்றிருக்கும் கிளியை, வேதத்துக்கு உரிய பாவைபோன்ற அழகியை மட்டுமே.

**விளக்கம்** : அறிவிலாஉலகால் பயனில்லை. அறிவுதந்தவள் இவளாதலின் பெற்றவளானாள்.

**9.**

பாவும் தொடையும் பதங்களும் சீரும் பலவிதமா
மேவும் கலைகள் விதிப்பா ளிடம்விதி யின்முதிய
நாவும் பகர்ந்ததொல் வேதங்கள் நான்கும் நறுங்கமலப்
பூவும் திருப்பதம் பூவால் அணிபவர் புந்தியுமே.

**குறிப்புரை** : தொடை= எதுகை மோனை முதலிய தொடைகள். பதம்= சொல். விதி= முறை. விதிப்பாளிடம்= செய்யுமாறு ஏவுகிறவள். இடம்= இடத்தன. முதியநா= நல்லதே சொல்லிப் பக்குவப்பட்ட நாக்கு. திருப்பதம் பூவால் அணிபவர் புந்தி= திருவடிகளை மலரிட்டு வணங்குவோர் மனம்.

**பொழிப்புரை** : முறைப்படி நல்லதே சொல்லிப்பக்குவப்பபட்ட நாக்கு, சொல்லப்பெற்ற நால்வேதம், மணக்கும் வெண்டாமரைமலர், அதில் எழுந்தருளியுள்ள திருவடி ஆகியவற்றை மனத்தில் பதித்தவர் மனம் ஆகிய அனைத்தும்; பாடல், பாடலில்அமையும் எதுகை முதலிய தொடைகள், சொற்கள், சீர்கள், மற்றும் பலவாறு பொருந்தும் கலைகள் ஆகிய இவற்றைச் செய்ய ஏவுகின்ற கலைமகளிடத்தனவாகும்.. இவற்றைஅருள்கிறவள் இவளே என்றார்.

**10,**

புந்தியில் கூரிருள் நீக்கும் புதிய மதியம்என்கோ
அந்தியில் தோன்றிய தீபம்என் கோநல் அருமறையோர்
சந்தியில் தோன்றும் தபனன்என் கோமணித் தாமம்என்கோ
உந்தியில் தோன்றும் பிரான்புயம் தோயும் ஒருத்தியையே.

**குறிப்புரை** : புந்தி= அறிவு. கூர்= மிக்க. என்கோ= என்பேனா. சந்தி= இரவு பகல் சந்திக்கும்ன் நேரம்.அதிகாலை மாலை. தபனன்= அக்கினி. மணித்தாமம்= முத்துமாலை. உந்தியில் தோன்றும் பிரான்= திருமாலின் கொப்பூழில் தோன்றிய பிரமன். தோயும்= தழுவும்.

**பொழிப்புரை** : திருமாலின் கொப்பூழில் தோன்றிய பிரமனின் தோள்தழுவும் ஒப்பற்றவளாகிய கலைமகளை; அறிவில் தோன்றும் மிக்கஅறியாமை இருளைநீக்கும் புத்தம்புதியநிலவு என்பேனா! அந்திநேரத்தில் இருள்போக்கத்தோன்றும் ஒளிவிளக்கு என்பேனா! மறைவல்லார் இரவும்பகலும் சந்திக்கும்நேரங்களில் செய்யும்வேள்வியில்தோன்றும்தீக்கடவுள் என்பேனா! முத்துமாலை என்பேனா! யாதென்பேன்!

**விளக்கம்** : வானுலவும் பழையமதியம் தேயும் வளரும். கலைமகளாகிய மதியம் தேய்தல் வளர்தல் இல்லாது எக்காலமும் நிறைவான மதியமாதலின் இவளைப் புதியமதியம் என்றார்.

11. ஒருத்தியை ஒன்றும் இலாஎன் மனத்தின் உவந்துதன்னை
இருத்தியை வெண்கம லத்(து)இருப் பாளைஎண் எண்கலைதோய்
கருத்தியை ஐம்புல னும்கலங் காமல் கருத்தைஎல்லாம்
திருத்தியை யான்மற வேன்திசை நான்முகன் தேவியையே.

**குறிப்புரை** : ஒருத்தியை= ஒப்பற்றவளை. ஒன்றும் இலா= சிறிதளவும் அறிவில்லா. இருத்தியை= இருக்கச் செய்தவளை. தோய் கருத்தி= கலந்தமனத்தள். ஐம்புலனும்= சுவை, ஒளி, ஊறு ஓசை நாற்றம் ஆகியஐவகை அறிவு.

**பொழிப்புரை** : ஒப்பற்றவளை, சிறிதும் அறிவிலாஎன்மனத்தில் தன்னைமகிழ்ந்து இருக்குமாறு செய்தவளை, வெண்டாமரையில் வீற்றிருப்பவளை, அறுபத்துநான்குகலைகளிலும் கலந்துஇருக்கும் மனத்தளை, என் ஐந்துஅறிவும் பலவாறுகலங்காமல் இருக்க அவற்றைத் திருத்தியவளை, நான்முகன் மனைவியை நான்மறக்கமாட்டேன்.

**விளக்கம்** : பிரமனின் முகங்கள், திசைதோறும் படைப்புக்கு ஒவ்வொன்றாக அமைந்த குறிப்பின் பொருட்டுத் திசை நான்முகன் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இலா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். எண்ணெண் கலை, ஐம்புலன் - தொகைக்குறிப்புகள். ஐம்புலனும் - உம்மை முற்றும்மை. .

12. தேவரும் தெய்வப் பெருமானும் நான்மறை செப்புகின்ற
மூவரும் தானவர் ஆகிஉள் ளோரும் முனிவரரும்
யாவரும் ஏனைய எல்லா உயிரும் இதழ்வெளுத்த
பூவரும் மாதின் அருள்கொண்டு ஞானம் புரிகின்றதே.

**குறிப்புரை** : பெருமான்= குரு. மூவர்=அயன் அரி அரன் ஆகிய மூவர். தானவர்= உலகோர். இதழ்வெளுத்த பூவர்= வெண்மையான இதழ்களுடைய மலர்கள். புரிகின்றதே= அறிவுச்செயல் செய்கின்றன.

**பொழிப்புரை** : தேவர், தெய்வத்தன்மைவாய்ந்த குருமார், நான்மறைகூறும் பிரமன், திருமால், உருத்திரன், உலகவர், முனிவர்கள் ஆகியயாவரும், அனைத்து உயிர்களும், வெண்மையான இதழ்களுடைய வெண்டாமரைமலரில் இருக்கும் இவ்வம்மையின் அருளால் ஞானச்செயல் செய்கின்றனர்.

**விளக்கம்** : பிறர்க்கு உதவுதலே ஞானத்தின் செயல். ஞானவடிவான கலைமகள் இருப்பது வெண்டாமரை. இது உதவுதல், மணம்பரப்பலும், தேனீப் போன்றவற்றுக்குத் தேன் வழங்குதலும், தன்இனம் பெருக மகரந்தம் வழங்கலும் ஆகும். பிறர்உள்ளிட்ட அனைத்தின் உதவியை “ ஏனைய எல்லாஉயிர்“ என்பதால் குறித்தார். .

13. புரிகின்ற சிந்தையின் ஊடே புகுந்து புகுந்(து)இருளை
அரிகின்ற(து) ஆய்கின்ற எல்லா அறிவின் அரும்பொருளைத்
தெரிகின்ற இன்பம் கனிந்(து)ஊறி நெஞ்சம் தெளிந்துமுற்ற
விரிகிற(து) எண்ணெண் கலைமான் உணர்த்திய வேதமுமே.

**குறிப்புரை** : புரிகின்ற= விரும்புகின்ற. அரிகின்றது= ஒழிக்கின்றது. விரிகின்றது= பெருகுகின்றது.

**பொழிப்புரை:** கலைகளுக்கு உரியமான் போன்றவளாகிய கலைமகள் உணர்த்திய வேதம், அவளை விரும்புகிறவர் மனத்தில் மேன்மேலும் புகுந்து அறியாமையை ஒழிக்கின்றது. ஆராய்கின்ற அரும்பொருள் எல்லாவற்றையும் அறிந்ததாலான இன்பம்ஊறிமுதிர அதனால் மனம்தெளிவுபெற்று முழுமையாக விரிவடைகிறது.

**இலக்கணக்குறிப்பு** : புகுந்து புகுந்து - அடுக்குத்தொடர்.

14. வேதமும் வேதத்தின் அந்தமும் அந்தத்தின் மெய்ப்பொருளாம்
பேதமும் பேதத்தின் மார்க்கமும் மார்க்கப் பிணக்(கு)அறுக்கும்
போதமும் போத உருவாகி எங்கும் பொதிந்தவிந்து
நாதமும் நாதவண்(டு) ஆர்க்கும்வெண் தாமரை நாயகியே.

**குறிப்புரை** : வேதத்தின் அந்தம்= வேதாந்தம் - உபநிடதம். பேதம்= வேறுபாடு, மார்க்கப் பிணக்கு அறுக்கும் போதம்= கூறும் வழிகளிடையே உள்ள முரண்பாடுகளை ஒழிக்கும் ஞானம். போத உரு= ஞானவடிவு. விந்து நாதமும்= சத்தி சிவம். நாத வண்டு= ஒலிக்கும் வண்டு.

**பொழிப்புரை** : வேதம், வேதாந்தம்( உபநிடதம் ), அதன்மெய்ப்பொருளாக விளங்கும் பலவகை மார்க்கங்கள் ( சமயங்கள் ) அந்தச்சமயங்களிடையே விளங்கும் முரண்பாடு, அந்த முரண்பாட்டினை ஒழிக்கும் ஞானம், அந்த ஞானத்தின் வடிவமாய் எல்லாவிடத்தும் விளங்கும் சத்தியும் சிவமுமாக விளங்குகிறவள், வண்டுகள்ஒலிக்கும் வெண்டாமரையில் வீற்றிருக்கும் கலைமகளாவாள்.

**விளக்கம்** : சமயமுரண்பாடுகளை ஒழிக்கும் ஞானமாகவிளங்குகிறவள் கலைமகள் ஆவாள்.

15. நாயகம் ஆன மலரகம் ஆவதும் ஞானஇன்பச்
சேயகம் ஆன மலரகம் ஆவதும் தீவினையா
லேஅகம் மாறி விடும்அகம் ஆவதும் எவ்வுயிர்க்கும்
தாயகம் ஆவதும் தா(து)ஆர் சுவேத சரோருகமே

**குறிப்புரை** : நாயகம் ஆன மலர் இடமாவதும்= தலைசிறந்த வெண்டாமரைமலர் இருப்பிடமாவதும், சேய்= இடம். தீவினையாலே அகம் மாறி= பாவத்தல் மனம் மாறி. விடும் அகம் ஆவதும்= (பாவத்தால்மாறிய மனத்தைக் கைவிட்ட ) தூயமனத்தைத் தன்இடம் ஆக்கிக்கொள்வதும். தாய் அகம்= தாய்வீடு. சுவேத சரோருகம்= வெண்டாமரையில்இருப்பவள்.

**பொழிப்புரை** : தலைசிறந்த வெண்டாமரைமலர் இருப்பிடமாகக் கொண்டதும், ஞானமாய் இன்பம்தரும் மனையான அந்தமலரில் விளங்குவதும், பாவச்செயலால் மாறியமனத்தைக் கைவிட்டவரின் தூயமனத்தைத், தன்இடமாக ஆக்கிக் கொள்பவளும், எல்லாஉயிர்களுக்கும் தாய்வீடு ஆவதும் வெண்டாமரையாளே.

**இலக்கணக்குறிப்பு** : சரோருகம் - இடவாகுபெயர்.

-

16. சரோருக மேதிருக் கோயிலும் கைகளும் தாளிணையும்
உரோரு கமும்திரு அல்குலும் நாபியும் ஓங்(கு)இருள்போல்
சிரோருகம் சூழ்ந்த வதனமும் நாட்டமும் சேயிதழும்
ஒரோருகம் ஈரரை மாத்திரை ஆன உரைமகட்கே.

**குறிப்புரை** : சரோருகம்= தாமரைமலர். உரோருகம்= கொங்கைகள். திரு அல்குல்= அழகிய புட்டம். . நாபி= தொப்பூழ். சிரோருகம்= தலைமுடி - கூந்தல். நாட்டம்= கண்கள். ஒரோருகம்= ஒப்பற்ற தாமரை. ஈர் அரை மாத்திரை=( அறிவுடையவர்களை )ஈர்த்து ஆளும் பாக்கியம் - நற்பேறு. உரைமகள்= புகழ்ச்செல்வி - கலைமகள்.

**பொழிப்புரை** : புகழ்ச்செல்வி ஆகிய கலைமகட்கு; தாமரைமலரே அவள்இருக்கும் திருக்கோயில்; இருகைகள், இருதிருவடிகள், இருகொங்கைகள், அழகிய இருபுட்டம், கொப்பூழ், மிக்கஇருள்ஒத்தகூந்தல்சூழ்ந்ததிருமுகம், கண்கள், செவ்விதழ்கள் ஆகியன ஒப்பற்ற தாமரைகளாய் நல்லறிவு உடையவர்களை ஈர்த்துஆளும் பேறுபெற்றனவாகும்.

**இலக்கணக்குறிப்பு** : கோயிலும் கைகளும் தாளிணையும், உரோருகமும் அல்குலும் நாபியும் வதனமும் நாட்டமும் இதழும் - உம்மைகள் எண்ணும்மை.

17. கருந்தா மரைமலர் கண்தா மரைமலர் காமருதாள்
அருந்தா மரைமலர் செந்தா மரைமலர் ஆலயமாத்
தருந்தா மரைமலர் வெண்டா மரைமலர் தாவில்எழில்
பெருந்தா மரைமணக் கும்கலைக் கூட்டப் பிணைதனக்கே.

**குறிப்புரை** : கருங்கண் தாமரைமலர்= கரியமைஎழுதிய கண்கள் தாமரைமலர்கள். காமரு= விரும்பத்தக்க. தாள்= திருவடிகள். அருந்தாமரை மலர் செந்தாமரைமலர்= அரியதாமரை மலர்களாகிய செந்தாமரைமலர்கள். தரும்= கொண்டது. தாவில் எழில்= குற்றமில்லா அழகு. பெருந்தாமரை மணக்கும்= மிக்கதாமரைமலர்கள் மணம்கமழும். கலைகூடப்பிணை= கலைகள்

ஒருங்கு கூடிய பெண்மான்.

**பொழிப்புரை** : குற்றமில்லாததும், அழகியயதும் ஆகிய மிகபல தாமரைகள் மணக்க, கலைகள்எல்லாம்கூடிய பெண்மானாகிய கலைமகளுக்கு; கரிய மைஎழுதியகண்கள் தாமரை மலர்கள், அனைவரும் விரும்பத்தக்க திருவடி அரியதாமரைமலராகிய செந்தாமரைமலர்கள், ஆலயமாகக் கொண்டது வெண்டாமரைமலர் ஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

18. தனக்கே துணிபொருள் என்னும்தொல் வேதம் சதுர்முகத்தோன்
எனக்கே சமைந்த அபிடேகம் என்னும் இமையவர்தாம்
மனக்கேதம் மாற்றும் மருந்(து)என்ப சூடுமலர் என்பன்யான்
கனக்கேச பந்திக் கலைமங்கை பாத கமலங்களே.

**குறிப்புரை** : தனக்கே துணிபொருள்= தான் முடிவெடுத்தபொருள். அபிடேகம்= கிரீடம். மனக்கேதம்= மனத்துன்பம். சூடுமலர்= தலையில்சூடும் மலர்.

**பொழிப்புரை** : அடர்த்தியால் கனத்தகூந்தல்ஒழுங்குடைய கலைமகளின் திருவடித் தாமரைகளை, பண்டைவேதம் நவாழ்வுக்குத் தாம் முடிவெடுத்தபொருள் என்னும்; நான்முகன் எனக்குச்சூட்டப்பெற்ற கிரீடம் என்பான்; தேவர்கள் தமது மனத்துன்பத்தை மாற்றிநலம்செய்யும்

மருந்து என்பர்; நான் என்தலையில் சூட்டிக்கொள்ளும் மலரென்பேன்.

**விளக்கம்** : இச்செய்யுள், நந்திக்கலம்பகத்தில்வரும்

" ஈட்டு புகழ்நந்தி பாணநீ எங்கையர்தம்
வீட்டில்இருந்து பாட விடிவளவும்- காட்டில்அழும்
பேய்என்றாள் அன்னை பிறர்நரிஎன் றார்தோழி
நாயென்றாள் நீஎன்றேன் நான் "

என்ற வெண்பாவை நினைவூட்டுகிறது.

19. கமலம் தனில்இருப் பாள்விருப் போ(டு)அம் கரம்குவித்துக்
கமலம் கடவுளர் போற்றுமென் பூவைகண் ணிற்கருணைக்
கமலம் தனைக்கொண்டு கண்(டு)ஒரு கால்தம் கருத்துள்வைப்பார்
கமலம் கழிக்கும் கலைமங்கை ஆரணி காரணியே.

**குறிப்புரை** : அம் கமலக் கரம்= அழகிய தாமரைஒத்த கை. பூவை= பெண். க= ஆன்மா. மலம்= மும்மலம். ஒருகால்= ஒருமுறை. கருத்துள் வைப்பார்= நினைப்பவர். க மலம்கழிக்கும் = அந்த ஆன்மாவாகிய கடவுளரின் மும்மலங்களையும் ஒழிக்கும். ஆரணி= பார்வதி தேவி. காரணி= நோக்கமுடையவள்.

**பொழிப்புரை** : விருப்பமுடன் தமது அழகிய கைகளைக்கூப்பி, ஆன்மாக்களாகிய மும்மலமுடைய கடவுளர் வணங்கும் இரக்கமுடைபெண், தன்னைஒருமுறைகண்டு தமது மனத்தில் பதிப்பவர்களாகிய ஆன்மாக்களின் மும்மலம்ஒழிக்கும் கலைமகள், பார்வதிதேவியின் நோக்கமுடையவளாய்த் தாமரையில் வீற்றிருப்பவளாவாள்.

**விளக்கம்** : திருமால் நான்முகன் முதலியகடவுளர் அனைவரும் மும்மலம் நீங்காத உயிர்களே - பசுபுண்ணியத்தரே ஆதலின் அவர்களை மும்மலமுடைய கடவுளர் - " க மலம் கடவுளர் " என்றார்.

20. காரணன் பாகமும் சென்னியும் சேர்தரு கன்னியரும்
நாரணன் ஆகம் அகலாத் திருவும்ஓர் நான்மருப்பு
வாரணன் தேவியும் மற்றுள்ள தெய்வ மடந்தையரும்
ஆரணப் பாவை பணித்தகுற் றேவல் அடியவரே.

**குறிப்புரை** : காரணன்= சிவபிரான். பாகமும் சென்னியும் சேர்தருகன்னியர்= வலப்பாகம், சடைஆகிய இருஇடங்களில் உள்ள பெண்களும் ( இவர்கள் முறையே திருமாலும் கங்கையும் ஆவர் ) ஆகம்= மார்பு. திரு=திருமகள். நான்மருப்பு வாரணன் தேவி= நான்கு தந்தங்களுடைய யானையாகிய அயிராவதமுடைய இந்திரன் மனைவி - இந்திராணி. ஆரணப்பாவை= வேதம்போற்றும்பெண்- பார்வதி தேவி ஒத்த கலைமகள். பணித்த குற்றேவல் அடியவர்= ஆணையிடும் குற்றேவல்களைச் செய்யும் பணிப்பெண்களே.

**பொழிப்புரை** : சிவபிரானின் வலப்பாகத்தில் இருக்கும் திருமால், சடையில் இருக்கும் கங்கை, திருமாலின் மார்பில்இருக்கும் திருமகள், நான்குதந்தங்ளுடைய அயிராவதம் என்னும் யானைக்குரிய இந்திரன் மனைவி, மற்றும் உள்ள தெய்வப்பெண்டிர் ஆகிய அனைவரும் வேதம்போற்றும் பார்வதி போன்ற கலைமகளுக்குக் குற்றேவல்செய்யும் பெண்டிரேஆவர்.

**விளக்கம்** : சிவபிரான் வலப்பாகத்தில் திருமால் ;

" ஒருபால் உலகளந்த மாயவனாம் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால் - இருபாலும்
நின்உருவம் ஆக நிறம்தெரிய மாட்டேமால்
நின்உருவோ மின்உருவோ நேர்ந்து " (அற்புதத்திருவந்தாதி, 41)

**21.**
அடிவேதம் நாறும் சிறப்பார்ந்த வேதம் அனைத்தினுக்கும்
முடிவே தவள முளரிமின்னே முடியா இரத்தின
வடிவே மகிழ்ந்து பணிவார் தமது மயல்இரவின்
விடிவே அறிந்(து)என்னை ஆள்வார் தலந்தனில் வேறிலையே.

**குறிப்புரை:** நாறும்= மணக்கும். அடி= திருவடி, முடிவு= முடிந்தமுடிவு. தவள முளரி= வெண்டாமரை. முடியா= எல்லை இல்லாத. மயல் இரவு= மனமயக்கமாகிய இருட்டு. விடிவு= தீர்வு - ஒளி. தலம்= உலகம்.

**பொழிப்புரை** : மணக்கும் சிறப்புப்பொருந்திய அனைத்துவேதங்களின் முடிவான மூலப்பொருளாய் விளங்கும் வேதத்திருவடியினளே! வெண்மையான தாமரைமலரில் இருக்கும் மின்னலே! எல்லையில்லாது ஒளிரும் இரத்தினமே! உன்னை மகிழ்வுடன் வணங்குவோரின் மனமயக்கமாகிய இருளுக்குத் தீர்வான ஒளியே! என்னையறிந்து ஆள்கிறவர் உலகில் உன்னைத்தவிர யாரும்இல்லை.

22. வேறிலை என்(று)உன் அடியாரில் கூடி விளங்குநின்பேர்
கூறிலை யானும் குறித்துநின் றேன்ஐம் புலக்குறும்பர்
மாறிலை கள்வர் மயங்காமல் நின்மலர்த் தாள்நெறியில்
சேறிலை ஈந்தருள் வெண்டா மரைமலர்ச் சேயிழையே.

**குறிப்புரை** : வேறிலை= கதிவேறு இல்லை. கூறிலையானும்= கூறவில்லை எனினும் குறித்து நின்றேன்= உன்னையே எண்ணினேன். ஐம்புலக் குறும்பர்= ஐம்புலன்களாகிய வேடர் / போக்கிரிகள். மாறிலை= மாறவில்லை. மயங்காமல்= ஐம்புலவேடர்களுக்கு மயங்காமல். நெறி= வழி. சேறிலை= நடக்காமல்.

**பொழிப்புரை** : கதிவேறு இல்லைஎன்று உன்அடியவருடன் கூடி, அருள் விளங்கும்உன் திருப்பெயரைநான் கூறவில்லை. ஆயினும்உன்னை எண்ணினேன். உன்னைஎண்ணியபோதும் ஐம்புல வேடர் தம்நிலையில் மாறவில்லை. அக்கள்வர்க்கு மயங்காமல் அவர்கள்காட்டும் வழியில் நடக்காமல் இருக்க, வெண்டாமரைப் பெருமகளே! எனக்கு அருள்புரிக.

23. சேதிக்க லாம்தர்க்க மார்க்கங்கள் எவ்வெவர் சிந்தனையும்
சோதிக்க லாம்உறப் போதிக்க லாம்சொன்ன தேதுணிந்து
சாதிக்க லாம்மிகப் பேதிக்க லாம்முத்தி தான்எய்தலாம்
ஆதிக் கலாமயில் வல்லிபொற் றாளை அடைந்தவரே.

**குறிப்புரை** : சேதிக்கலாம்= வெட்டலாம் - வெல்லலாம். சோதிக்கலாம்= ஆராயலாம். உற= தக்கவாறு. போதிக்கலாம்= எடுத்துக்கூறலாம். சாதிக்கலாம்= நிறுவலாம். பேதிக்கலாம்= வேறுபடுத்தலாம். கலா ஆதிமயில்= கலைகளுக்கு உரிய தொன்மையான மயில். பொற்றாள்= பொலிவுவாய்ந்த திருவடி.

**பொழிப்புரை** : கலைகளுக்குஉரிய தொன்மையான மயிலாகியகலைமகளின் பொலிவு வாய்ந்த திருவடிகளைச்சரணடைந்தவர்; பிறர்கூறுவனவற்றைத் தருக்கவழியில் வெல்லலாம், பிறர் கருத்தை ஆராயலாம்; பிறர்க்குத் தக்கவாறு எடுத்துக்கூறலாம், தான்சொன்ன கருத்தைத் துணிவுடன் நிறுவலாம், வேறுபடுத்தியும் கூறலாம், முத்திப்பேறும் அடையலாம்.

24. அடையாள நாள்மலர் அங்கையில் ஏடும் மணிவடமும்
உடையாளை நுண்இடை ஒன்றும்இ லாளை உபநிடதப்
படையாளை எவ்வுயி ரும்படைப் பாளைப் பதுமநறும்
தொடையாளை அல்லது மற்(று)இனி யாரைத் தொழுவதுவே.

**குறிப்புரை** : நாள்மலர் அடையாள அங்கை= புதுமலர்க்கு அடையாளமான அழகியகை. ஏடு= கலைகள் தீட்டப்பெற்ற சுவடி. மணிவடம்= ஜபமாலை. படையாள்= தொகுப்புடையவள். படைப்பாள்= அறிவுடன் படைப்பவள். நறும்பதுமத்தொடை= மணக்கும் தாமரைமலர் மாலை.

**பொழிப்புரை** : புதுமலர்க்கு அடையாளமாக விளங்கும் அழகிய கையில் கலைகள் தீட்டப் பெற்ற சுவடியும் ஜபமாலையும் உடையவளை, நுட்பமானஇடுப்பு என்றஒன்றும் இல்லாதவளை, உபநிடதங்களின் தொகுப்பு உடையவளை, எல்லாஉயிர்களையும் அறிவுடன் படைக்கின்றவளை, மணக்கும்தாமரைமலர் மாலையுடையவளைத்தவிர வேறுயாரைநான் தொழுவது! உன்னையே தொழுவேன்.

**இலக்கணக்குறிப்பு** : இரண்டாம்அடி பொழிப்புமுரண்தொடைஉடையது.

25. தொழுவார் வலம்வரு வார்துதிப் பார்தம் தொழில்மறந்து
விழுவார் அருமறை மெய்தெரி வார்இன்ப மெய்புளகித்(து)
அழுவார் இனும்கண்ணீர் மல்குவார் என்கண்ணின் ஆவதென்னை
வழுவாத செஞ்சொல் கலைமங்கை பால்அன்பு வைத்தவரே.

**குறிப்புரை** : விழுவார்= திருவடிகளில் சரணடைவார். மெய்= உண்மை / ஞானம்.

மெய் புளகித்து= உடல் சிலிர்த்து. இனும்= மென்மேலும். என் கண்ணின் ஆவதென்னை= எனது கண்ணின் பயன் என்ன.

**பொழிப்புரை** : குற்றமில்லாத நற்சொல்தரும் கலைமகளிடம் அன்புகொண்டவர்; அவளைத் தொழுவார், வலம் சூழ்வார், துதிப்பார், தம்செயல் மறந்து அவள் திருவடிகளில் சரண்புகுவார், சிறந்த மறைகள்கூறும் ஞானநிலையை ஆராய்வார், அதனால் இன்புற்று உடல் சிலிர்த்துக் கண்ணீர்சிந்துவார், பத்திமையால் மேன்மேலும் கண்ணீர்பெருக்குவார். ஆனால் நான்பெற்ற கண்களால் பயன்என்ன! ( தன்னை அத்தகு பத்திமை இல்லாதவன் என்றார் )

26. வைக்கும் பொருளும்இல் வாழ்க்கைப் பொருளுமற்(று)
எப்பொருளும்
பொய்க்கும் பொருளன்றி நீடும் பொருளல்ல பூதலத்தின்
மெய்க்கும் பொருளும் அழியாப் பொருளும் விழுப்பொருளும்
உய்க்கும் பொருளும் கலைமா(து) உணர்த்தும் உரைப்பொருளே.

**குறிப்புரை** : வைக்கும்= சேர்த்துவைக்கும். பொய்க்கும் பொருளன்றி= நிலையாத பொருளே தவிர. நீடும்= நிலைத்து நிற்கும். மெய்க்கும்= உண்மையான.

விழுப்பொருள்= மேலான பொருள். உய்க்கும்= நன்னெறியில் செலுத்தும். உரைப்பொருளே= புகழ்ப்பொருளேயாகும்.

**பொழிப்புரை** : இவ்வுலகில் சேர்த்துவைக்கும் பொருளும், இல்லறமாகிய பொருளும் மற்றும் எப்பொருளும் நிலையாதனவேயன்றி நிலைக்கும் பொருலல்ல. உண்மைப்பொருளும், அழிவில்லாத பொருளும், மேலானபொருளும், நல்வழியும் செலுத்தும் பொருளும் கலைமகள் உணர்த்தும் புகழாகிய பொருளேயாகும்.

**விளக்கம்** : என்றும் நிலைத்தது உயர்புகழே :

" ஒன்றா உலகத்(து) உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதுஒன்று இல் " ( திருக்குறள். 233 )

**27.** பொருளால் இரண்டும் பெறலாகும் என்ற பொருள்பொருளோ
மருளாத சொற்கலை வான்பொரு ளோபொருள் வந்துவந்தித்(து)
அருளால் விளங்கும் அவர்க்(கு)ஒளி யாய்அறி யாதவருக்(கு)
இருளாய் விளங்கு நலம்கிளர் மேனி இலங்கிழையே.

**குறிப்புரை** : பொருள்= செல்வம் - காசுபணம். இரண்டும்= அறமும் இன்பமும். என்றபொருள்= என்றுகூறிய செய்தி. பொருளோ= உண்மையா. மருளாத= மனமயக்கம் இல்லாத. கலைவான்பொருள்= மேலான கலைவாணி. பொருள் பொருளோ= தெய்வம் நிலையான பொருளா. வந்து வந்தித்த= வந்து வணங்கி. அருளால்விளங்கும் அவர்க்கு= இவளின் அருளால் சிறக்கும் அடியவர்க்கு. ஒளியாய்= புகழாய் / ஞானமாய். அறியாதவர்க்கு= இவளை அறியாதவர்க்கு. இருளாய்= பெருந்துன்பமாய். நலம் கிளர் மேனி= நன்மை ஒளிரும் உடம்பு.. இலங்கிழையே= பெண்ணே.

**பொழிப்புரை** : நன்மைஒளிரும் உடம்புடைய பெண்ணே! காசுபணத்தால் அறமும் இன்பமும் அடையலாம் என்ற செய்தி நிலையானஉண்மையா? மனமயக்கம் இல்லாத சொற்களை அருளும் மேலான கலைமகள் நிலையானஉண்மையா? இவளிடம் வந்துவணங்கி, இவளது அருள்வடிவாக விளங்குகிறவர்க்குக் காசுபணம்; புகழ்தருவதாய் / ஞானமாய் விளங்கி, இவளை அறியாதவர்க்குத் பெருந்துன்பமாய் அந்தப்பொருள் விளங்கும் காரணத்தால் காசுபணம், அறமும் இன்பமும் தராது, இவள் அருளே அனைத்து நலன்களும் தரும்.

**விளக்கம்** : பெருஞ்செல்வம் இருந்தும் அதனால் அடைய வேண்டிய நலன்களை அனுபவிக்க, " கொடுப்பினை - நல்லூழ் " வேண்டும். இதற்குரிய நல்லறிவு இவள்அருளால் அமைவதாதலின், இவளை நினைப்பார், நினையாதார் அடையும் பலன் கூறினார்.

இச்செய்யுளின் முதலடி,

" வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்
நடுவணது எய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர் " ( நாலடியார். மெய்ம்மை. 4 )

( மூன்று= அறம், பொருள், இன்பம். நடுவணது= பொருட்செல்வம் )

என்ற வெண்பாவை நினைவூட்டி, அதன் கருத்தை மறுக்கிறது.

28. இலங்கும் திருமுகம் மெய்யிற் புளகம் எழும்விழிநீர்
மலங்கும் பழுதற்ற வாக்கும் பலிக்கும் மனம்மிகவே
துலங்கும் முறுவல் செயக்களி கூரும் சுழல்புனல்போல்
கலங்கும் பொழுது தெளியும்சொல் மானைக் கருதினர்க்கே.

**குறிப்புரை** : இலங்கும்= ஒளிரும். மலங்கும்= கலங்கும். வாக்கு= சொல். துலங்கும்= ஒளிரும். முறுவல் செயக்களிகூரும்= புன்முறுவலால் களிப்பு மிகும். சுழல்புனல்போல்= நீர்ச்சுழி போல். தெளியும் சொல் மான்=தெளிவுபெறக் கூறும்கலைமகள். கருதினர்க்கு= நினைப்பவர்க்கு. முறுவல் செயக் களிகூறும்= புன்முறுவலால் களிப்பு மிகும்.

**பொழிப்புரை** : நீர்ச்சுழிபோல் கலங்குகிறபொழுது, தெளிவுதரும் சொல்லை உணர்த்தும் கலைமகளை நினைப்பவர்க்கு; தெய்விகமாய் முகம்ஒளிரும்,மெய்ம்மயிர்பொடிக்கும், கண்ணீர் கலங்கும், குற்றமற்றசொல் பலிக்கும், மனம்மிகவும் ஒளிரும். புன்முறுவலால் களிப்புமிகும்.

**விளக்கம்** : நீர்ச்சுழி, தன்னிடம் அகப்பட்டதை சுற்றிச் சுழற்றித் தனது மையத்துக்கு இழுத்துப் பொருள்புலப்படாதவகையில் கீழே இழுத்துக் கொள்ளும். அதுபோல் மனக்கலக்கம் தன்னையுடையவரைத் தன்மயமாக்கி ஒன்றும்புலப்படாது செய்யும்

கலைமகளை ஆழமாக நினைப்பவரின் மெய்ப்பாடுகளை இச்செய்யுள் கூறுகிறது.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

29. . கரிஆர் அளகமும் கண்ணும் கதிர்முலைக் கண்ணும்செய்ய
சரிஆர் கரமும் பதமும் இதழும் தவளநறும்
புரிஆர்ந்த தாமரை யும்திரு மேனியும் பூண்பனவும்
பிரியாஎன் நெஞ்சினும் நாவினும் நிற்கும் பெருந்திருவே.

**குறிப்புரை** : கரிஆர்= கருமைநிறம் பொருந்திய. அளகம்= கூந்தல். கண்= மைஎழுதியகண்.. சரி ஆர் செய்ய கரம்= வளையல் அணிந்த சிவந்த கை. பதம்=

திருவடி. இதழ்= உதடு. தவ புரி ஆர்ந்த நறுந்தாமரையும்= வெண்மையான முத்துமாலை ஏந்தி, மணக்கும் தாமரையாகியகை. பூண்பன= அணிகலன்கள். பெருந்திருவே= அறிவுக்குரிய பெருந்தெய்வம். .

**பொழிப்புரை** : அறிவுக்குரிய பெருந்தெய்வமே! உனது கருமைநிறமுடைய கூந்தல், மைஎழுதியகண், முலைக்கண்களுடன் கூடிய ஒளிபொருந்தியமுலை, வளையல் அணிந்த செங்கை, செந்திருவடி, செவ்விதழ், வெண்மையான முத்துமாலை ஏந்தியதும் மணப்பதுமாகிய தாமரைக் கை, திருமேனி, அணிகலன் ஆகியன என்மனத்தினும் நாவினும் நிலைத்து நிற்கும்.

**30.** பெருந்திரு வும்சய மங்கையும் ஆகிஎன் பேதைநெஞ்சில்
இருந்தரு ளும்செஞ்சொல் வஞ்சியைப் போற்றில்எல் லாவுயிர்க்கும்
பொருந்திய ஞானம் தரும்இன்ப வேதப் பொருள்அருளும்
திருந்திய செல்வம் தரும்அழி யாப்பெரும் சீர்தருமே.

**குறிப்புரை** : சயமங்கை= வெற்றித்திரு. வஞ்சி= கலைமகள்.

**பொழிப்புரை** : அறிவுக்குரிய பெருந்தெய்வமும் வெற்றித்திருவும் ஆகி, எனது அறிவற்ற மனத்தில் இருந்து செம்மையான சொற்களை அருள்புரியும் கலைமகளைப் போற்றினால், அவள், எல்லாவுயிர்களுக்கும் தக்கஞானம் தருவாள், வேதத்தின் பொருளை அருள்வாள், செம்மையான் செல்வம் தருவாள், நிலையான பெருஞ்சிறப்புத்தருவாள்.

திருச்சிற்றம்பலம்